# இன்பத்துப் பால்

| எண் | பெயர் | |
|---|---|---|
| 1 | ஆதாமின் தனிமைத் துயா | |
| 2 | ஆகாயம் நிறம் மாறலாம் | |
| 3 | அழகை | |
| 4 | அல்லி மலர்க் காதலன் | |
| 5 | அழுகை | |
| 6 | அம்மையப்பன் | |
| 7 | அமாவாசை நிலவு-காதல் | |
| 8 | அன்பே | |
| 9 | அப்பா | |
| 10 | சிந்தெரெல்லா | |
| 11 | ஏழை | |
| 12 | ஏன் மறந்தாய் | |
| 13 | எண்ணாத எண்ணமெல்லாம் | |
| 14 | ஏதேன் வனம் | |
| 15 | எங்கே என் இறைவன் | |
| 16 | இறை தேடல் | |
| 17 | இலையின் நடனம் | |
| 18 | இம்மானுவேல் | |
| 19 | இன்பத்துப்பால் | |
| 20 | இறையன்பு | |

| இன்பத்துப் பால் | | |
| --- | --- | --- |
| எண் | பெயர் | |
| 21 | இது என்ன மாயம்? | |
| 22 | இதயம் | |
| 23 | ஜெயப்பூர் கால்கள் | |
| 24 | கடலும் கரையும் | |
| 25 | கடவுள் | |
| 26 | காகம் | |
| 27 | கல்நெஞ்சு | |
| 28 | காலைப்பொழுது | |
| 29 | கல்லுக்குள் தெய்வம் | |
| 30 | கனவு | |
| 31 | கனவும் கற்பனையும் | |
| 32 | கண்டதும் காதல் | |
| 33 | கண்கள் | |
| 34 | கண்ணம்மா என் காதலி | |
| 35 | காதல் காவியம் | |
| 36 | காதல் கிளி | |
| 37 | காதல் மலர் | |
| 38 | காதல் மரங்கொத்தி | |
| 39 | காதல் முல்லை | |
| 40 | காதல் நோய் | |
| | | |

# தனிமைத் துயர்-ஆதாம்- (*Adam's Syndrome*)

---

***ஆண்டவராகிய கடவுள் மனிதன் தனியாய் இருப்பது நல்லதன்று***
***அவனுக்கு உகந்த துணையை உருவாக்குவோம் என்றார்***
( தொ. நூ.2-18)

கொழுகொம்பெனத் தழுவும் பூங்கொடியோ?-இவள்
என்னுள் உலா வரும் சுவாசக்காற்றோ?
என் வானில் ஒளி தரும் வெண்ணிலவோ?,
என் பூவனத்தில் காதல் சிந்துபாடும் பூங்குயிலோ?

தாயாய் என்னைத் தாலாட்டும் அன்புறவோ?,
என் தனிமைத் தாகம் தீர்க்கும் வானமுதோ?
என் உள்ளத்தை கொள்ளை கொண்ட ராதை
வாழ்க்கைத் துணையாய் இறைவன் தந்த தேவதை

என் என்பின் என்பானவள்-என் ஊனின் ஊனானவள்
என் இதயத் தவிப்பை உணர்ந்தே என்னிலிருந்து-
இறைவன் படைத்த பெண்ணிவள்-ஏவாள்
என் இதயக் கோயிலின் காதல் தேவதை.

மதுபோதையோ-சில மணி நேரம்
மாதிவள் காதல் போதையோ
காலம் உள்ளவரைக்கும்
மானுடன் நெஞ்சில் நிலைக்கும்

இறைவன் இணைத்த காதல் உறவிது
இதயச் சங்கமத்தின் இருப்பிது.
மானுட சந்ததியின் தொடக்கமிங்கே
காதல் வரலாற்றின் பிறப்புமிங்கே.

ஏதேன் தோட்டமெங்கும்- எதிரொலிக்கும்
ஆதாமின் காதல் பாடல்-
ஏவாளை மயங்கவைத்த முதல் மனிதனின்
முதல் காதல் பாடல்

இன்று- **(தனக்கு தகுந்த துணையை மனிதன் காணவில்லை-(தொ.நூ..**2:23)

என் இதயமெங்கும் ஆதாமின் ஏக்கம்,
இறைவனிருந்தும் இன்பவனமிருந்தும்
கொடிய தனிமையின் தாக்கம்.

சூனியத்தின் கொடிய ஆக்கிரமிப்பு இதயத்தை வாட்டிட
தனிமைத் துயர் நெஞ்சின் ஏக்கத்தைக் கூட்டிட,
நீரோடை தேடும் மானாய்
அன்பைத் தேடி அலையும் இதயம்

அனல் காற்று வீசும் பாலையாய்
மனம் கொதித்து கிடக்கும்
அன்பு மழைக்காய் -சின்ன இதயம்
பாலைவன ரோஜாவாய் வாடித் துடிக்கும்.

ஓயாத அலைகளாய் சோகம் நெஞ்சில் அலைமோதிட,
இமயத்தை சுமக்கும் பாரமாய் சின்ன இதயத்தை
"தனிமை" வாட்டிட-என் தேவனே! என் தேவனே!
ஏன் என்னை கைநெகிழ்ந்தீர் என்று மனம் கதறும்

தென்றல் தீண்டும் போதெல்லாம்
தீயும் தேகம்,-தேன்குரலில் பூங்குயில்
பாடும்போதெல்லாம்-துணைக்காய் ஏங்கும்
காளை நெஞ்சில் ஒற்றைக் குயிலின் ராகம்

வண்ண நிலா உலா வரும்போதெல்லாம்
வாடும் தனிமையுள்ளம்-காதற் கிளிகள் கொஞ்சி
மகிழக் கண்டு கலங்கித் தவிக்கும்
காதல் நெஞ்சில் சோக வெள்ளம்

காதலில்லாத வாழ்வு பாலையாய்க் கொதித்திட
தனிமைத் துயர் எரிநரகாய் வாட்டிட
வாடும் மனம்- மோட்ச இன்பம் அறிந்திட
காதலி ஏவாளிற்காய்த் தவமிருக்கும்

காதலில்லாத வாழ்வும் வாழ்வோ?
காதலே மோட்சம்-காதல் கன்னியோ
தேவ கடாட்சம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# ஆகாயம் நிறம் மாறலாம்

---

ஆகாயம் நிறம் மாறலாம்
அலையும் முகிலும் நிறம் மாறலாம்
அலை வீசும் கடலும் சுவை மாறலாம
அசையும் காற்றும் திசை மாறலாம்

பருவங்கள் நிலை மாறலாம்
எது மாறினும் மாறாது
மறையாது-கண்ணே உன்
மீது நான் கொண்ட காதல்

பூந்தேன் சுவை மாறலாம்
புள்ளிக்குயிலும் கூவ மறக்கலாம்
புவியீர்ப்பு விசையும் பூச்சியமாகலாம்
காந்தபுலமும் கவர்ச்சி இழக்கலாம்

அசையும் புவியின் திசை மாறலாம்
எது மாறினும் மாறாது மறையாது
அன்பே-உன் மீது நான் கொண்ட காதல்

கரை தழுவ அலையும் கடலும், கவிபாடிப்
பூந்தேன் அருந்தத் தினமலையும் வண்டும்
கதிரணைத்து கண்விழிக்கும் மொட்டும்
நிலமணைத்து நிறம் மாறும் மழையும் உள்ளவரை
பூமி தன்னில் வாழுமடி நம் காதல்
வளர்மதியே வருந்தாதே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# அழகி

---

கொள்ளை அழகடி நீ, என்னைக் கொல்லும் அழகடி
குமுத வாயில் அமுதச் சுவை ததும்ப
பொட்டு வைத்த வட்ட முகத்தில் பூத்த புன்னகை
கட்டித் தழுவு, காமன் விருந்து எனச் சொல்ல
பொன்னுடலோ அழகின் பேரவை
பூ மணக்கும் பொன்மணியோ காமன் திருச்சபை

அல்லிப் பூவாய் விரிந்த விழிகளும்-என்னை
அள்ளிக் கொள் எனச் சொல்ல, கள்வடியும் செவ்விதழ்களும்
பருகிக் கொள் என அழைத்திட, அள்ளக் குறையாத
கொள்ளையழகோ அப்பாவி நெஞ்சை கொள்ளையிட
சொல்லத் தெரியாத விரகதாபத்தால் புண்ணான நெஞ்சம்

வில்லாய் நின்ற புருவமும், வேலாய் நின்ற விழிகளும்
காமன் கணைகளாய் நெஞ்சில் பாய நெஞ்சமெல்லாம்
புண்ணாகி, நினைவெல்லாம் காதல் பண் இசைக்க
காதல் சொல்லத் தவித்தேன்-காதலைச்
சொல்லாமல் சொன்னவளிடம்.

காமன் கணையால் புண்பட்ட உள்ளம்
காதல் வலையில் சிக்குண்டு தவித்திட
காதல் வரம் தந்த கன்னித் தேவதை
என்னைக் கவிஞனாக்கிய பூங்கோதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

# அல்லி மலர் காதலன்

---

மதுமலர் கார்குழல் மனதை மயக்க,
பேரழகுப் புதுமலரோ என மனம் வியக்க
பொன்மேனி வீசும் பூவாசம் சுவாசத்தை நிறைக்க
குமுத வாயில் அமுதப் புன்னகை நெஞ்சை நிறைக்க
கண்மணியாள் தேன்மொழியாள்
காதல் வரம் தரும் தேவதையாள் இவள்தானோ?

இளநெஞ்சு துடிக்க கனவிலும் நினைவிலும்
என் மனவானில் உலாவரும் பௌர்ணமியாள்
கண்டு மலர்ந்தேன்-காதலில் விழுந்தேன்
அல்லிமலர்க் காதலன்யான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# அழுகை

---

வானில் உன் பெயரை எழுதி வைத்தேன்
வாயு அழித்ததடி
வட்ட நிலவில் எழுதி வைத்தேன்
வைகறையில் தேய்ந்ததடி
வண்ணமேகங்களில் எழுதி வைத்தேன்
மழையாய்க் கரைந்ததடி
கரையில் உன் பெயரை எழுதிவைத்தேன்
அலைகள் அழித்ததடி, அழியாதென்று
என் இதயத்தில் எழுதி வைத்தேன்
நீயே அழித்து
ஏனடி என்னை அழவைத்தாய்

பூக்களில் உன் பெயரை எழுதி வைத்தேன்
ஒரு பொழுதுக்குள் வாடி வீழ்ந்ததடி
பாக்களாய் உன் பெயரை எழுதி வைத்தேன்
கவிஞர்கள் கவிதை என வியந்தாரடி
என் இதயத்தில் உன் பெயரை எழுதிவைத்தேன்
காதலாகி காணாமல் போனேனடி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

## அம்மையப்பன்

அன்னையிருந்தபோது-நீயோ தந்தையாயிருந்தாய்
அன்னை மறைந்தபோது-அநாதை எனக்கு-
இறைவா நீயே அம்மையப்பனானாய்

உன்னை நேசிக்க கோடிப் பக்தருண்டு
என்னை நேசிக்க எனக்கு நீ மட்டும்தானுண்டு
அம்மையப்பனே
அநாதை என்னை மறவாதே.

## ஏலி ஏலி லமா சபக்தானி

சுற்றி நின்று அழ -சொந்தமென்று யாருமில்லை
சுமந்து சென்று புதைத்திட நண்பரென்று எவருமில்லை
கற்ற வேதமெல்லாம் துறந்து கடந்திட
உற்ற தேவனும் ‘‘எட்டாவது’’ வானில் இருந்திட
விண்ணுக்கும் மண்ணுக்குமிடையே நின்று
**ஏலி ஏலி லமா சபக்தானி**
என்றே கதறிட-என் இறைவா
ஏன் என்னைக் கைநெகிழ்ந்தாய்?

## ஊதாரிமைந்தன்

புலன்வழி சென்று யயாதியாய் அலைந்தேன்
பொன்மானைத்தேடி இராமனாய் ஏமாந்தேன்
‘‘என்’’வழி சென்று ஊதாரியாய் உருவழிந்தேன்
அப்பா என் தந்தையே
மனம் திரும்பி உனைச் சரணடைந்தேன்
மன்னித்து என்னை ஏற்றிடுவாய்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

# அமாவாசை நிலவு

---

என் நெஞ்சுக்குள் நீயோ தேனாய் இனிக்க,
உன் நெஞ்சுக்குள் நானோ பூவாய் மணக்க,
காதல் பூத்ததென்று களித்திருந்தேன்
என் சோகக் கருவானில் வெண்ணிலா
உதித்ததென்று மகிழ்ந்திருந்தேன்.

உன் நெஞ்சில் நானில்லை என்ற உண்மை
நஞ்சாய் என்னைக் கொல்ல சிறு நெஞ்சோ
அனலில் விழுந்த புழுவாய்த் துடிக்க வஞ்சியே
ஏனடி என்னை வஞ்சித்தாய்?

என் நெஞ்சினுள் வளர்த்த காதல்
பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போயிட
இலவு காத்த கிளியானேன்
நிலவிழந்த அமாவாசை வான் ஆனேன்.

குறிஞ்சி மலராய் மலர்ந்த காதல்
நெருஞ்சி முள்ளாய் மாறியதுமேனோ?
அமுதமொழியாய் இனித்த உறவும்
அலைகடல் உப்பாய்க் கரித்ததுமேனோ?

பூவாய் நெஞ்சை நிறைத்தவளே
நெஞ்சில் தீயை வளர்த்தாள்?
அமுதாய் நெஞ்சில் இனித்தவளே-
ஆலகால விஷமாய்க் கசந்தாள்?

என் பொன்வானில் உலா வந்த தேன்நிலவிற்கு
இனி என்றும் அமாவாசையோ?
என் பூந்தோப்பில் குடியிருந்த புள்ளி குயிலிற்கு-பாடிட
இனி என்றும் முகாரியோ?

***காதலர் பொய்கலாம்-உண்மைக்***
***காதல் பொய்பதில்லை-ஆதலால்***
***மானுடரே காதல் செய்வீர்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-6-4-2023

# அன்பே

---

சொல்லாமலே என் நெஞ்சுக்குள் வந்து
என்னைக் கொல்லாமல் கொல்லும் பெண்ணே
என் இதயம் எழுதும் கவிதையெல்லாம்
உன் விழிகள் சொன்ன காதலே

என் நெஞ்சில் இனிக்கும் நினைவுகள் எல்லாம்
உன் இதழ்கள் சிந்தும் தேன் மொழிகளே
பஞ்சைப் பற்றிய தீயாய் என்னை எரிப்பதும்
அன்பே நெஞ்சைப் பற்றிய உன் காதலே

விடி விளக்காய் நீ நெஞ்சில் நீ ஒளிரும் போது
எதற்கு ஒளிவிளக்கு
காதல் நிலவாய் நெஞ்சில் நீ உலவும்போது
எதற்கு தேன் நிலவு?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# அப்பா- தந்தாய்

---

நினைவறிந்த நாள் முதல்
தந்தையில்லாப் பிள்ளை நான்
“அப்பா” என்றழைத்தது
இறைவா உன்னைத்தான்

நட்பும், உடன் பிறப்பும் பிரிந்தபோதும்
தென்றலாய் மலர்ந்த காதல்
புயலாய் நெஞ்சை புண்படுத்தியபோதும்
அழுதே உன்னைத் தொழுது நின்றேன்

ஆனந்த உறவாய் அன்புருவாய்
என் உயிரில் கலந்த அன்னை உறவும்
என்னை விட்டுப் பிரிந்தபோது
அநாதையான நான்-அம்மையப்பனாய்
உன்னையே தொழுது நிற்கின்றேன்

என் இறைவா என் தந்தையே
உன்னை நான் மறந்தாலும்-உன் பிள்ளை
என்னை நீ ஒரு போதும் நீ மறவாதே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# சிந்துஜா என் சிந்தரெல்லா

---

மல்லிகையாய் நெஞ்சுக்குள் மணந்து
மலைத்தேனாய் நினைவுக்குள் இனித்து
பூந்தென்றலாய் சுவாசத்தை நிறைத்து
தேன்மழையாய் இதயத்தை நனைப்பவள்

இன்பத்துப்பாலாய் என் கவிதைகளில் கலந்து
கனவில் நிலவாய் உலா வரும் தேவதை
என் சிந்ரெல்லா இவள்தானா?

உன்னைக் கண்ட நாள் முதல் உண்ண மறந்தேன் -
உறக்கம் துறந்தேன்-இந்த காதல் வந்தபின்
என்னை மறந்தே வாழ்கின்றேன்
இது என்ன அதிசயம்?

நெஞ்செல்லாம் அவள் நினைவாகி-இரவெல்லாம்
இவள் கனவாகி சித்தம் நினைப்பு செய்கையெல்லாம்
அவளை எண்ணி உருகிட -அன்பே இதுதான் காதலா?

எண்ணமெல்லாம் நீயாகி இன்ப கனவும் உனதாகி
வண்ணமயிலாய் ஆடுகின்றேன்
கன்னிமயிலே காதல் சொல்லாயோ?

கோயில் முற்றத்தில் கண்டெடுத்த உன் ஒற்றைக் கொலுசோடு
உன்னைத் தேடிக் தவிக்கின்றேன்-காணாத
நாள் எல்லாம் அமாவாசை இரவாய்க் கழிய
கண்டபோது, பொழுதே போகாதே என மனம் புலம்ப
ஏனடி என்னைக் காதலில் கரையவிட்டாய்? ஏனடி
காதல் வலியை நெஞ்சுணர என்னைத் தவிக்கவிட்டாய்?

கண்டெடுத்த காற்கொலுசையும் தேவதையின் காலணிய
கண் சுவைக்க நறுந்தேனாய்-முத்துப் புன்னகையும் இனிக்க
கண்டெடுத்த புதையலாய் காதலும் இளநெஞ்சை மகிழ்விக்க
என்னைத் தன் இதயத்தில் இன்பக் காதலாய் சூடிய இனியவள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# ஏழை

---

கண்களை உயர்த்திக் கடவுளை விழிக்கும்
அங்கவீனத் தோற்றம் ஏழை அவன் உருவம்
இரந்து வாழ்தல் அவன் வாழ்வாதாரம்
இரக்க மனமுடையோரே அவன் வாழ்வுக்கு ஆதாரம்

அங்கவீனனாய் அவன் பிறப்பு நடைபாதையிலோ
அவன் பிழைப்பு, சூம்பிக் கிடந்த கால்கள் ஒரு புறம் நீட்டிக்
கிடக்க, மூன்றாம் காலாய் ஊன்றுகோலும் ஓய்வெடுக்க
சூம்பிய கைகள் சில்லறைக்காய் நீண்டு சோர
ஏழையின் முகத்தில் என்றும் வாடாத புன்னகை

கண்டும் காணாமல் சென்ற குருடரும்
இருந்தும் பகிராமல் சென்ற கஞ்சனும்
இருப்பதை பகிர்ந்த ஏழை வள்ளல்களும்
நாளும் அவன் வாழ்வில்

வாழ்க்கைப் போராட்டத்தில்
ஊனமும் வறுமையும் கோலமிட்ட காயத்தில்
என்றும் அவன் முகத்தில் நிலைக்கும் புன்னகை
இறைவன் கொடுத்த வரமோ?

அன்பிற்காய் ஏங்கும் உலகில்
அங்கவீனனாய்த் தெரியும்-ஏழை
துன்புறும் இயேசுவோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

# ஏன் மறந்தாய் என் உயிரே

---

உன்னையன்றி என்னை நேசிக்க எனக்கோ யாருமில்லை
உன்னை நேசிக்கவும், ஆராதிக்கவும்-உனக்கோ பலருண்டு
என்னைப்போல் உன்னை நேசிப்பார் யாருமில்லை
இது உனக்குத் தெரியும்.
என் நேசம் எத்துணை இனிதென்று தெரிந்தும்
ஏனடி என்னைப் புறக்கணித்தாய்?

வாசப் பூவாய் மலர்ந்தேன், நீயோ
வருத்தும் நெருஞ்சி முள்ளாய்த் தைத்தாய்
காதல் மழையாய் விழுந்தேன்
நீயோ கற்பாறையாயக் கிடந்தாய்

மேகத்தை காதல் தூது விட்டேன்-கலைத்துவிட்டாய்:
இராகத்தால் காதலைப் பாடி அழைத்தேன்
செவிகளைப் பொத்திக் கொண்டாய்

என் உயிரிலோ காதலின் ஆறாத ரணம்
என் மெய்யிலோ முகாரியின் கானம்
கரும்பான என் காதலைத் துரும்பாய் அவமதிக்க
ஏழை என்பதால் இரும்பானதோ உன் பூமனது?

இனியவளே என்னை நீ மறுத்தாலும்
என் காதல் நீயடி-எந்நாளும் நீ நலம் வாழ
நான் பாடும் வாழ்த்துப் பாடல் இதுவடி

உன் மீது நான் கொண்ட நேசம்
வண்ணப் பூ கொண்ட வாசம்
அது மாறாது மறையாது மடியும்வரை
உன்னை ஒரு போதும் என் நெஞ்சம் மறக்காது.

என் காதல் வானுக்கும் ஒரு நிலவுண்டு
அது நீயில்லை என்றானபின்னர்
கண்கலங்கிச் சோகக்கடலில் அமிழ்ந்தேன்
எங்கிருந்தாலும் நீ வாழ்க

பற்றறுத்தல் போன்ற சுகம் இவ்வுலகில் ஏதுமில்லை
கற்றறிந்த நூலறிவும் பற்றறுக்க உதவாது
இறையருளே- பற்றறுக்க உற்ற துணை
இன்புற்றேன் என்னை மறந்தேன்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-6-4-2023*

# எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி

---

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணித் துடித்து
என் காதல் நெஞ்சம் புண்ணாணதடி
காதற் கிளிகளாய் கூடிகளித்த காலம்-கண்ணம்மா
பழங் கதையாய் மாறி கனவாய் கலைந்து போனதேனடி

காதலால் கசிந்துருகி காதல் கள்ளிருக்கும்
என் வண்ண மலரே -உன் பூந்தும்பி வாடுதடி
காதல் நிலவே- உன்னைக் காணாது
என் வானம் அமாவாசை இரவானதடி

காகிதப் பூக்களை மோகித்துச் சோரும் மனம்
காதலுக்காய்த் கண்ணீர்த் தவமிருக்க-
காதல் தேவதையே
காட்சி கொடு, காதல் வரம் கொடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# இன்ப வனம்

---

அந்திச் சூரியன் அள்ளிப்பொழிந்த வண்ணக் கதிர்களால்
நாணிச்சிவந்த வானம், வாச மலர்களால் பூவாசம் விசிய
இன்ப வனம், பூந்தென்றலில் பூவினங்கள் ஆடி மகிழ-புதுமலரில்
தேனருந்திப் போதையால் சிந்துபாடும் வண்டினங்கள்

கனிகள் சுமந்து களிப்புற்ற பழமரங்கள்
கடல் நோக்கி சல சல என ஓடும் நதியினங்கள்
துணையோடு உலாப்போகும் விலங்கினங்கள்
எங்கும் பேரானந்தப் பரவசங்கள்

பூரித்த புன்னகையும், பொன்னில் வார்த்த
பொற்சிலையாய்ப் பேரழகும்-வாரிக்கொள் -
வாசச் சந்தனமாய் என்னைப் பூசிக்கொள்,
பூமாலை என என்னைச் சூடிக்கொள்

சக்கி முக்கி கல்லாய் உரசிக் கொள்
மோக வீணை என்னை மீட்டிகொள்
வண்ணக் காதல் சொல்-அழகி
ஏவாள் கண்டு மயங்கி நின்றான் ஆதாம்

இடை தழுவி, செவ்விதழ்த் தேன் பருகி
அங்கமெல்லாம் காதல் மின்சாரம் பாய்ந்திட
காதல் வேள்வி செய்து அன்பில் இலயித்து நிற்க
ஆவல் கொண்ட காதல் கிளிகள்

நெஞ்சுக்குள் பெய்யும் தேன்மழை இவள்தானோ?
என் சுவாசத்தை நிறைக்கும் பூங்காற்றும் இவள்தானோ?
என் உணர்வுக்கு உயிர் கொடுத்த அமுதோ இவள்
மனமோ தன்னை மறந்து கவிபாட
தையல்மேல் மையல் கொண்ட மனம் மயங்கிட
தன்னை மறந்தான் ஆதாம்

கண்டதும் விழிகளில் காதல் தேனூறும்-நெஞ்சிலோ-
நேசம் புதுப்புனலாய் பொங்கிடும்
நினைவும், கனவும் இவள் துணைக்காய் ஏங்கிடும்
கவிதை தானாய் வந்திடக் கவிஞனாய் மனம் மாறிடும்

என் என்பின் என்பானவள்-என் சதையின் சதையானவள்
காமனை வெல்ல இறைவன் தந்த காதல் துணையாள்
நெஞ்சம் காதல் பண்ணிசைக்க-கொடியாய்ப்
படர்ந்த முல்லைக் கொடி-தேராய்
தன்னை ஈந்த ஆதாமோ வள்ளல் பாரி

கண்ட மதகுரு கொண்ட கோபத்தில்
பாவம் செய்யாதீர் மானிடரே -" சமயத்தை"
எடுத்தரைத்து காதலரைப் பழித்தான்

சட்டம் வந்தது- சம்பிரதாயம் வந்தது
ஒழுக்கம் எங்கே?
ஒனறாய்க் கூடி மகிழ உரிமை எங்கே
சட்டத்தில் குற்றம் இது-சமூகத்தில் ஒழுக்ககேடு இது
குறைகண்டு கொதித்து நின்றது

அன்பினால் இன்புற்ற காதலர்
காதலில் என்ன பாவம் இருக்கு?
தூய உள்ளம் இறை சந்நிதானம்
பூரண சரணாகதியே இராஜயோகம்

தூய உள்ளத்தோரே இறைவனை காண்பர்
பாவ உள்ளத்தோரோ பழி சொல்வர்
காதலில் விழுந்ததால் காணமல்போனது
நான் எனும் ஆணவம்
கண்டு இன்புற்றதோ "நாம்" என்ற இறையனுபவம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# எங்கே என் இறைவன்?

---

எங்கே என் இறைவன்?
எங்கும் தேடியலைந்து களைத்தேன்
அலைபொங்கும் கடலோரம்
அவரைக் காணோம்.

வெண்மணலும், வீசம் காற்றும் கூறின
இங்கில்லை அவரென்று
வெற்றுப்படகும் வெறிச்சோடிய கடற்கரையும்
கூவின இங்கில்லை அவரென்று.

கோயில்களிலில்லை- என் குருநாதர்-இருந்திருந்தால்
குருக்களோடும் ஆயர்களோடும் விவாதிக்கும்
சத்தியத் தேடலான அவர் குரல் கேட்டிருக்கும்

மூடக்கொள்கைகளையும், குருட்டு விசுவாசத்தையும்
கண்டிக்கும் அவர் கம்பீரம்
எளிய மனங்களைக் கவர்ந்திருக்கும்.

போலி ஆன்மீகம் ஒழிந்திருக்கும்
ஆலயங்களும் ஆன்மா லயம் பெறும்
இறை இல்லங்களாய் மாறியிருக்கும்

சிவப்புத் தொப்பிகளும், கறுப்புப் பட்டிகளும்
செல்வர் வீட்டில் விருந்துண்ண-ஏழை இலாசர்கள்
இன்றும் வாயிலோரம்- இரந்து நிற்க, புண்களை நக்கி
அன்பைச் சொல்ல, தெருநாய்களுக்கும் பஞ்சமிங்கே.

இயேசுவை தேடிப்போனேன் நாய்கள் எல்லாம்
செல்வர் வீட்டின் செல்லப் பிராணிகளாயிட
எங்கும் குரைப்புச் சத்தம்
ஏழை இலாசர்களை விரட்டும் சத்தம்.

சக்கேயுவின் விருந்தில் -அவர் இல்லை
மத்தேயுவின் விருந்திலும் அவர் இல்லை
பரிசேயன் சீமோன் விருந்திலும் அவர் இல்லை
எங்கு போனார் என் இறைவன்,

விலைமாது மரியாள் எல்லாம் புனிதையாகிட,குலமாதர்களோ-
விலைமாதர் உடையில் உருமாறிட ஊரெங்கும் புது நாகரீகம்.
ஒலிபரப்பிகளின் சகிக்க முடியாத சத்தம், ஆலயங்களோ
சினிமாக் கொட்டகைகளான அவலம்



வெருளிகளாய்-ஆலயமுகப்புகளில வெற்றுச் சிலுவைகள்.
இன்றும் இயேசுவை அறைந்து கொல்லக் காத்திருக்கும்
அபாய எச்சரிக்கைகள் -எங்கும் தேடிக் களைத்தேன்
என் நேசரைக் காணவில்லை.

முப்பது வெள்ளிக் காசுக்காய் -இன்றும் யூதாஸ் முத்தமிட்டுக்
காட்டிக் கொடுத்திருப்பாரோ? அச்சத்தில் பேதுரு
மறுதலித்திருப்பாரோ?, அம்மணமாய்ச் சீடர்களும்-
அவரைக் கைவிட்டோடி உயிர் பிழைத்திருப்பாரோ?

அன்னாசும் கைப்பாசும் அவமதித்தே
பிலாத்துவிடம் கொல்லக் கையளித்திருப்பாரோ?
நெஞ்சு பதைக்கத் தேடிக் களைத்தேன்.

இன்றும்-பணத்திற்கு-
இயேசுவை விலைபேசும் திருச்சபை-
காட்டிக் கொடுக்க-ஆவலாய்க்
காத்திருக்கும் சீடர்களின் அவல நிலை

எங்கும் தேடியலைந்து களைத்தேன்.
என் இறைவா-என் உள்ளத்தில் நீயிருப்பதை
அறியாமல் கேவியழுது சோர்ந்தேன்
கண்டபின் “நான்” காணாமல் போனேன்
“நானே நீயாகிப்” பரவசமானேன்

மானுடன் இவன்--ஊனுடல் நீங்கி-மாதவனே
உனைச் சேரும் நாள் எந்நாளோ என்னிறைவா?

***தூய உள்ளத்தோர் பேறுபெற்றோர்-ஏனெனில்
அவர்கள் இறைவனைக் காண்பார்கள்.***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

# இறை தேடல்

---

அலையும் முகிலாய் உன்னைத் தேடிக்
கறுத்துக் களைத்தேன்
மலையில் மோதி மழையாய்க் கரைந்து
மண்ணில் விழுந்து அழுதேன்

நதியாய் ஓடிக் கடலில் கலந்தும்
இரையும் கடலாய்த் தரையில் உரசி
இரவு பகலாய் உன்னைக் கூவியழைத்தேன்
கதிரால் மீண்டும் அலையும் முகிலாகி
உன்னை தேடிக் களைக்கின்றேன்
என் இறைவா எங்கே நீ ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# இலையின் நடனம்

---

பசுந்தளிராய்த் துளிர்த்து,பச்சிலையாய் பருவமெய்தி
பருவக்காற்றில்-தோழியருடன் கிளை நின்று
நடனமாடும் இலைமாதே, முதுமையில் ஞானம் தேடிட
காவியுடுத்து துறவு பூண்டு பிறந்த வீட்டைத் துறந்தாய்

கடைசி மூச்சிலும் காற்றில் சுழன்றாடும்
உன ஆனந்தச் சுருளி நடனம் -நடராஜனையும்
ஆனந்தக் கூத்தாடவைக்குமடி

வாழ்வு எத்துனை சுவையென்பதை
காற்றில் உன் நர்த்தனம்
சொல்லாமல் சொல்லுதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# இம்மானுவேல்

---

காண்பதெல்லாம்-கலையும் வெற்றுக் கனவுகளோ?
கட்டுவதெல்லாம் அலையில் கரையும்
மணல் வீடுகளோ?

காலையில் பூத்து மாலையில் உதிரும்
மலராய் வாழ்வு-மதுவும், மணமும்
இறைவன் தந்த கொடை
கொடுத்து மகிழ்வதோ ஈகை

மண்ணால் செய்த கூட்டுக்குள் மனித வாழ்வு
மூப்பு. பிணி. சாவு கூட்டை அழிக்கமுன்
மனிதா உன்னுள் வீட்டைத் தேடு

மானிடரே
நம்பிக்கை கொள்ளுங்கள்
இறைவன் நம்மோடு

உள்ளுணர்வில் உயர்ந்தால்-வீடு
தாழ்ந்தால் சுடுகாடு

நன்மை, தீமை-இருமைக்குள்
ஆடும் வாழ்வோ ஊசலாட்டம்
இருமை கடந்த வாழ்வே மோட்சம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# இன்பத்துப் பால்

கலைந்த கார்குழலும் கலங்கிய விழிகளும்
சொல்லும்-என் காதலைக் காற்றே-அவரிடம்
தூதாய் எடுத்துச் செல்

நினைவிலும் நீ, கனவிலும் நீ
நீங்கினால் சுடுகின்றாய்-நெருங்கினால்
குளிர்கின்றாய் அதிசய காதல் தீயே
எரிந்தும் தீயாத உன் காதல் நெருப்பில்
இதயமே நானடி

ஒரு விழியாள் நோய் தந்து-மறு விழியாள்
நோய் தணித்தாய் வேல் விழியே
மையெழுதிய உன் விழிகள் செய்யும்
காதல் மாயம்தான் என்ன?

கண்டும் மகிழ்ந்தேன், கனவிலும் மகிழ்ந்தேன
நினைத்தும் மகிழ்ந்தேன-காதலே
கள்ளிலும் போதையடி -உன் நினைப்பு
மலரிலும் மென்மையடி- உன் அணைப்பு

நினைக்கும்போதெல்லாம் அமுதாய் இனிக்கும்
உன் உறவு- நீ மறந்தபோது மட்டும்
நெருப்பாய்ச் சுட்டதடி- விஷமாய்க் கசந்ததடி-

நெஞ்சில் நிறைந்தபோது சொர்க்கம் தந்தாய்
நினைவில் விரிந்தபோது கவிதைகள் தந்தாய்
உன்னைப் பிரிந்தபோது ஏனடி கண்ணீர் தந்தாய்?

உன் நெற்றிப் பொட்டும்-நீள் விழிகளும்
என்னைக் காதல் பித்தனாக்குதடி
உன் முத்துப் பற்களும் மோகனச் சிரிப்பும்
நெஞ்சில் காதல் சுரத்தைக் கூட்டுதடி

விழிகள் உண்டு, விழிகள் தழுவி
விழிகள் போதையுறும்-காதல் உலகில்
மொழிகள் சுவையிழக்கும்
விழிகள் பேசும் காதல் மொழியில்
உயிரும் மெய்யும் ஒன்றாய்க் கரையும்

காதலே-உன் இதயவாசலில் கோலமிட்டேன்
நீயோ காணவில்லை-உன் உதயவானில்
காதல் பூபாளமிசைத்தேன் கேட்கவில்லை ஏனடி?

மும்தாஜே! என் முழு நிலவே
கண்பார்த்து நெஞ்செழுதிய அன்புக் காவியமே
என் சித்தம் நினைப்பு செய்கை உள்ளவரை
என் இதயம் உனை ஒருபோதும் மறவாது

கையளவு மனசுக்குள் கடலளவு காதல் வைத்தேன்
காதலே ஏனடி அதைக் கண்ணீராய் மாற்றினாய்?

பார்வையால் தேகத்தை தழுவினாய்
புன்னகையால் இதயத்தை திருடினாய் ஏனடி?

பார்தாள்- பார்த்தேன்-பருகினாள்-உருகினேன்
நினைத்தேன் தும்மினாள்
நெஞ்சுக்குள் வந்தாள் -நினைவர்ய்க கலந்தாள்
இதழ் கதவு திறந்து புன்னகைத்தாய்-ஏனடி
இதயக்கதவை மட்டும்-இன்னமும்
பூட்டி வைத்திருக்கின்றாய்- வலிக்குதடி

பூ எதற்கு பூவையே-பூவாயிருக்க
நகை எதற்கு புன்னகையிருக்க
நறுமணம் எதற்கு-வாசமாய் நீ மணக்க
தேன் எதற்கு-இதழ் “கள்” இருக்க
நான் எதற்கு நானே நீயானபின்
என் சுவாசக்காற்றே என் உயிர் உனதடி

பார்க்கத் தவித்துப் பார்த்ததுவும்
பேசத் தவித்து பேசியதும்
காதலாகி கனிந்ததுவம்-நீ போனபின்
கனவாய் பழங்கதையாய் ஆனதடி கண்ணம்மா
கண்ணில் கங்கை பெருகுதடி

காலையில சூடி, மாலையில் வீசிட
என் காதல் என்ன
ஒரு நாளைக்குள் வாடும் பூவா?

ஒரு நாளில் வாடும் பூவல்ல நம் காதல்
வாடா மலராய் எந்நாளும் வாழ்ந்திருக்கும்
அழியா உறவடி நம் காதல்

விண்ணில் உன் பெயரை எழுதிவைத்தேன்-
காற்று கலைத்ததடி
மண்ணில் உன் பெயரை எழுதிவைத்தேன்
கடலலைகள் அழித்ததடி-என்றும் நிலைக்க
என் நெஞ்சில் உன் பெயரை எழுதிவைத்தேன்
ஏனடி என் இதயத்தை துடிக்கவைத்தாய்?

பால் நிலவோ வான் வெளியில்
தேன் நிலவோ-வெகு தொலைவில்
காதல் நெஞ்சோ பாழ்வெளியில்
கண்ணீர்ப் பூக்களோ மனவெளியில்

உன்னை மறப்பதென்பது என் இறப்பு
உன் நினைவில் வாழ்வதே- என் உயிர்துடிப்பு

விழிகளோ இவை இல்லை-என்னை
விழுங்கிடும் காமன் கயல்கள்?
செவ்விதழ்களா-இவை-மலர்ந்த முத்தப்பூக்களின்
புத்தம்  புது தேன் கிண்ணங்கள்

கன்னச் சிவப்பினில் நாணம் வரைந்ததோ காதல் ஓவியம்
மோகனச் சிரிப்பினில் உள்ளம் எழுதியதோ
காதல் காவியம்

இமைக்க மறந்தேன் என் இமைகளே திரையாகி
உன் அழகை மறைத்து விடுமோ என்று
விழிக்க மறந்தேன்-விழிப்பே தடையாகி
இன்பக் கனவு கலைந்துவிடுமோ என்று

பூவென்று உன்னை நெஞ்சில் சூடிவைத்தேன்
ஏனடி-முள்ளாய் மாறினாய்?

வஞ்சி மகளே உன் நெஞ்சுக்குள் நானில்லை
என்ற சோகம் பூ நெஞ்சுக்கு நஞ்சானதடி
என் நிம்மதியும் பறிபோனதடி

நீருக்குள் வாழும் மீனாய்-என் இதயம்
உன் நினைவுக்குள் வாழுதடி

யாரிவள் தேவதையா இல்லை மோகினியா?
நீல விழிகளால் நெஞ்சை திருடியவள்
கான மொழியாள் கவிதை பாடியவள்

விண்ணெங்கும் தேடினேன்-வெண்ணிலவே
உன்னைக் காணவில்லை-மண்ணெங்கும் தேடினேன்
தேன் மலரே உன்னைக் காணவில்லை
கண்கலங்கி நெஞ்சம் நொருங்கிட
என்னுள்ளே தேடினேன்-காதலே
என்னுள் “நீயே” “நானகி” நின்றாய்

உன் முத்துப் பற்களும் மோகனச் சிரிப்பும்
என்னை காதல் பித்தனாக்குதடி
உன் தங்க குழலும் வண்ணவிழிகளும்
காமன் கணையை நெஞ்சில் சொருகுதடி

உன்னை மட்டும் பிரம்மன் ஏனடி
இத்துணை அழகாய் படைத்து
காதல் வரமாய் என்னிடம் தந்தான்.

விழிகளால் என் நெஞ்சில் கவிதை எழுதினாள்
மொழிகளால் -என் செவிகளில் காதல் தேனை ஊற்றினாள்
புன்னகையால் என் நெஞ்சுக்கு -காதல் பூமாலை சூட்டினாள்
வண்ணக் கனவுகளால் என் இரவுகளை
வசந்தமாக்கினாள் யார் இந்தத் தேவதை?

வண்ணப்பூவே என் எண்ணமெல்லாம்-நீயடி
வாசமலரே-என் காதல் தேசம்-நீயடி

உன் கண்பட்டதால் புண்பட்ட காதல் நெஞ்சம்
நாணப் புன்னகையால் குணமான
மாயம்தான் என்ன? காதலா?

சக்கி முக்கி கற்களாய் உரசிக்கொண்டன விழிகள்
பற்றிக் கொண்ட நெருப்பில் சிக்கித் தவிக்குதடி என் இதயம்

உண்டு சுவைத்த மதுவிலும்-இனியது-மாது
இவளை கண்டு சுவைத்த் சுவை

அழகே உன்னைக் கண்டதும்
இமைக்க மறந்தன விழிகள்
துடிக்க மறந்தது இதயம்
கண்டதும் போதையுறும் அழகே-நீயென்ன
என்னை ஆட்கொண்ட காதல் புலமா-இல்லை
அதிசயக் காந்தப்புலமா?

பூவாகித் தேனாகி மதுவாகிப் பூத்தவளே-
காதலாகி, காமத்துப்பாலாகி இனித்தாள்
அழியாத ஓவியமாய், அன்புக் காவியமாய்
இன்றும் என் நெஞ்சில் நீயடி
தீராத சோகமாய்,ஆறாத காயமாய்
இன்றும் உன் காதலடி

நீயிருக்கும் வரை நெஞ்சில் கவிதைப் பூக்களடி
நீபோனபின் விழிகளில் கண்ணீர்ப் பூக்களடி

கல்லில் பெய்த மழைபோல் ஆனதடி என் காதல்
முள்ளில் விழுந்த பழந்துணியாய் நோகுதடி நெஞ்சம்

கார் கூந்தல் பூச்சொல்லும்-கயல்விழிகளின்
மை சொல்லும், இதழ்கள் ஊறும் தேன் சொல்லும்
கண்ணாளா என்னைப் பிரியாதே
காதல் நோயுற்றேன் உன்னால் என்று

கயல்விழிகளிலோ காயாத ஈரம்
பூவிதயத்திலோ இமயத்தை சுமக்கும் பாரம்
காதல் காயங்களால் ரணமான தேகம்-மனமோ
ஒற்றை குயிலாய் முகாரி பாடும் சோகம்

குயில்களாயப் பாடி மகிழ்ந்தும்
மயில்களாய் ஆடித் திரிந்ததும்
கிளிகளாயப் பேசி களித்ததும்
கனவாய் பழங்கதையாய் போனதடி

நீ போனபின் இதயத்திலோ ஆறாத ரணம்
இமைகளிலோ வற்றாத ஈரம்

ஒரு பூவாய் மலர்ந்தேன் நீ சூடிக்கொள்ளவில்லை
ஒரு பண்ணாய் ஒலித்தேன் நீ ஆடி மகிழவில்லை
ஒரு கவிதையாய் விரிந்தேன் நீ இரசிக்கவில்லை
கண்ணீராய் உதிர்ந்தேன் ஏனடி கண்கலங்கினாய்

உன் இதயத்தின் ஒரு கோடியில்
எனக்கோர் இடம்கொடு-பெண்ணே
என் காதல்வாழும்

என் நெஞ்சமெல்லாம் பூத்து மணக்கும்
காதல் நந்தவனமா இவள்?
என் சுவாசமெல்லாம் வந்து நிறைக்கும்
பூந்தென்றலா இவள்?
என் கண்களிரண்டையும் கொள்ளை கொண்ட
தேன் நிலவா இவள்-நாளும்
என் பூவிதயத்தை துடிக்கவைத்த
காதல் தேவதையா இவள்?

கண்வழி நுழைந்து நெஞ்சினில் விழுந்த
காதல் தேன்துளியே-கண்ணிலும் இனிக்கும்
கருத்திலும் இனிக்கும் காதல் தந்தவளே
விண்வழி பறக்க இறக்கைகள் தந்தாய்
நீரில் நடந்திட கால்கள் கொடுத்தாய்

தேவதையே-உன்னை
என் இருவிழிகளிலும் எழுதிவைத்தேன்
என்னை அழவைத்தாய்
உயிர்க் காற்றினில் உலாவவிட்டேன்
என் மூச்சைத் திணறடித்தாய்
இதயத்தில் குடிவைத்தேன் துடிக்கவைத்தாய்
உயிரில் கலந்துவிட்டேன் ஏனடி என்னை மடியவிட்டாய்?

விம்பங்கள் தோன்றி மறையும் -என் விழித்திரையில்
உன் மோகனவிம்பம் மட்டும் மறையாத மாயமென்ன?

இமை மூடினும் மறையவில்லை-துயில் கூடினும்
வண்ணம் கலையவில்லை
என் நெஞ்சுக்குள் நீயிருப்பதாலா?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-7-04-2023

# இறையன்பு

---



கன்னியர் இதயங்களையும், காதலின்
வண்ணக் கதவுகளையும் மூடி வைத்த இறைவன்-
தன் இதயக்கதவை மட்டும் -ஏனோ
எனக்காய் அகலத்திறந்து வைத்தான்?

கலையும் காதல் கனவுகளால் நெஞ்சம் குலைய,
கயிறறுந்த காற்றாடியாய் மனம் அலைய,
பொன்மானைத் தேடி புண்பட்ட இராமனாய் மனம் சலிக்க,
வாழ்வு, வெறுங் கனவாய் பழங்கதைாய் ஆனது

மனம் நொந்து நான் கதறிட
***என்றும் நானே உன் மகிமை என் மகனே***
***மாய உலகப் பெருமைகள் உனக்குத் தேவையில்லை***
***வெற்றிக்காய் அல்ல-விசுவாச வாழ்விற்காய்***
***அழைக்கப்பட்டவன் நீ***

அன்பினால் எனக்குணாத்தி
என்னை ஆட்கொண்டார், தந்தையும்
தாயுமான என் இறைவன்.

கன்னியர் இதயம் ஒன்றும் காதலின் சொர்க்கபுரியல்ல
காதலின் வண்ணக் கனவுகளைச் சூடிமகிழ
வாடாத தேவலோகப் புஷ்பங்களுமல்ல

உண்மைக் காதல் என்று ஏதுமில்லை
எல்லாம் கானல் நீரே-பொய்மை ஆளும்
உலகில் காதலும் வியாபாரமே, வேஷம்கட்டி ,
அரிதாரம் பூசி விடியும்வரை ஆடும் கூத்தே
விடியலில் எத்தனை விவாகரத்தோ?

மாறும் இந்த உலகில்-மாறாதது இறையன்பு ஒன்றே
உணர்ந்தே ஆனந்தம் கொள்வாய் என் மகனே
அறிந்தே அமைதி காண்பாய்.

அமைதி கண்ட மனம் -இன்புற்று
இறை துதி பாடும் தினம் தினம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# இது என்ன மாயம்?

இது என்ன மாயம்?- பார்த்தபின்
மீண்டும் மீண்டும் பார்க்கத்தூண்டும் பூமுகம்
பேசியபின் மீண்டும் மீண்டும்
கேட்கத் தோன்றும் கனிமொழிகள்

விழிகளில் காதல் தேன் ததும்ப
மொழிகளில் கவிதை தேன்வடிய
வாசப்பூவாய் மலர்ந்த நேசப்பூவே
வாடுதடி என் நெஞ்சம் -உன் அன்பைத் தேடி

நினைக்கும்போதே இனிக்கும் நினைவுகள்
தூங்கும்போதோ இன்பக் கனவுகள்
படிக்கும்போதோ-பிறக்கும் காதல் கவிதைகள்
என் இறைவா யாரிவள்?

கண்வழி நுழைந்து நெஞ்சுக்குள் விழுந்த
காதல் தேன்துளியே -என் மொழியில்
கவிதைத் தேன் வடிய, காதலாகி மலர்ந்த இதயம்
காதல் சிறகடித்து வானில் பறக்குதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-04-2023

# இதயமே இதயமே

உன்னை மறப்பதென்பது என் இறப்பே-பார்வதி
உன் நினைவில்தான் நாளும் என் வாழ்வே
உன்னை மறக்கத் துடித்ததில் மதுவும் தோற்றதடி
மரணத்தை தேடிட நஞ்சும் என்னை ஏமாற்றியதடி

இதயமெங்கும் ஏகாந்தத்தின் கொடிய ஆக்கிரமிப்பு
இனம்புரியாத சோகம் இரவு பகலாய் நெஞ்சை வாட்டும்
இன்னுயிரை இழந்து துடிக்கும் இதயம்
ஏகாந்த வெளியில் கண்ணீர்த் தவமிருக்கும்
துணைதேடி கூவிக் களைத்த கோகிலம்
கேவி கரைந்து மௌனத்தில் மூழ்கும்

நீர் முட்டும் விழிகள் சூனியத்தில் நிலைக்க
உயிர்க் காற்றைத் தேடி சுவாசம் களைக்க
என்னுயிரே ஏனடி என்னை மறந்தாய்
என நெஞ்சு கூவிக் கதறும்.

விடியாத இரவுகளாய் நாட்கள்
விழிநீராய் உதிரும் சோகப் பூக்கள்
காதல் பூத்த மனதை கவலைக் கரையான் அரித்திட
இதயராகம் இசைத்த மனதில் முகாரியின் ஆலாபனம்

பாலையாய் வரண்ட நெஞ்சு அன்பு மழைக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும்-கண்ணாடித் துண்டுகளாய்
நொருங்கிய இதயம் காயமாகி உதிரம் சிந்தும்.
மாயையான உலகில் காதலும்
கன்னியர் அன்பும் கானல் நீராகும்

விழி நீரில் முகம் கழுவும் நாட்கள்-நாளும்
இதயத்தை ஊடுருவும் சோக வாட்கள்
முகமெங்கும் -கறுப்பு கொடியாய் தாடி
அகத்தீயில், வாடி உதிரும் பூவாய் அமைதி

தேன் தும்பிபோல் உன் பூமுகம் தேடிக் களைக்கும் கண்கள்
நெஞ்சுதான் உன் நேசம் சுவைக்காமல் வாடிச் சோரும்
நெஞ்சில் உன்னை நிறுத்தி நித்தம் காதல் தவமிருந்தேன்
காதல் தேவதை காட்சி தரவில்லை
அழுகையில் மூழ்கி மடிய சோகம் தீரவில்லை

மந்தமாருதம்-வீசிய காதல் பூவனத்தை
சண்டமாருதம் சீரழிக்கும்
அன்பு மழை பொழிந்த மனதில்
கவலை அமில மழை பொழியும்

காதலே ஏனடி என்னைக் கைநெகிழ்ந்தாய்
சாதலே, ஏன் என் நெஞ்சில் கேளாமல் குடிவந்தாய்
கண்ணீர் பூக்களைச் சொரிந்து
தேவதாஸாய் கதறும் நெஞ்சு.

அவள் ஒரு புன்னகைக்காய் காதலால் துடித்து
காயமான மனசு-அவள் ஒரு பார்வைக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும் இளவயசு

நூலறுந்த பட்டமாய் தள்ளாடும் இதயம்
புழுதியில் விழுந்த பூமாலையாய் வாடும்

அன்பிற்காய் ஏங்கும் நெஞ்சு
அன்னை மடி தேடி மழலையாய்க் கதறும்
காதல் கானல் நீராய்போன துன்பத்தில்
இதயம் நரகநெருப்பில் தீயும்

அன்பும் பொய்யான உலகில்
அனைத்தும் மாயையாய்த் தோன்றும்
சாவின் மடியில் தேடிடும் சாந்தி
காதலுக்கு வரமாய் மாறும்

விண்ணெங்கும் தேடினேன் வான்மதி உன்னைக் காணவில்லை
மண்ணெங்கும் தேடினேன் பூமிகா உன்னைக் காணவில்லை
என்னுள்ளே தேடினேன்-என்னவளே என்னுயிர்க் காதலே
என்னுயிராய் நீயிருக்கக் கண்டேன்-உவகை கொண்டேன்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-7-4-2023*

# ஜெய்ப்பூர் கால்கள்

---

யுத்த பூமி சத்தமின்றிக் கிடந்தது-விழித்துக் கிடந்த
நிலக்கண்ணிகள் பறித்துக்கொண்ட பாதங்கள்
தசைத் துண்டங்களாய்ச் சிதறிக் கிடந்திட
கவலைக் குளத்தில் கண்ணீர்ப்பூக்களோடு
அங்கவீனச் சமூகமொன்று புதிதாய் பிறந்தது இங்கே.

அங்கமிழந்த மானுடம்-நடைப்பிணமாய் வாடியிருக்க
சொந்தமிழந்த உறவுகள் சோற்றுக்காய் கையேந்தி
சாலையோரங்களிலும் கோயில் வாயில்களிலும் தவமிருக்க
ஊன்றுகோல்களும் மூன்றாம் கால்களாய்
ஊனுடலோடு ஒட்டிக் கிடந்த அவலம்

அன்று எழுந்து நட என்றே
முடவரை நடக்கச் செய்தவர் இயேசு-இன்று
முடமாகிப்போன மானுடம் எழுந்து நடந்திட
கண்ணீர் வடியும் முகங்களில் புன்னகைப் பூக்கள் மலர்ந்திட
இருள் சூழ்ந்த இதயத்தில் நம்பிக்கை ஒளி பிறந்திட
ஜெயப்பூர் கால்கள் கொடுத்தே
எழுந்து நடக்கச் செய்கின்றார் ஜெயப்பூர் மனிதர்
இவரும் இறைமகனே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-7-4-2023*

# கடலும் கரையும்

கடலாய் நான்-கரையாய் நீ, அலையாய் கரைந்து
உன்னைத் தழுவத் துடிக்கின்றேன்-முடியவில்லை
ஒற்றை குயிலாய் கரைந்து உறவே உன்னைக்
கூவியழைக்கின்றேன் காதலே-ஏனடி
உனக்குக் கேட்கவில்லை.

தந்தியறுந்த வீணையாய் தவிக்கும் இதயத் துடிப்பு
கண்மணி உனக்குக் கேட்கின்றதா?

கண்பார்த்து நெஞ்செழுதிய காதல் காவியமே
மண்பார்த்த வெண்ணிலவும்-விண் நோக்கும்
வண்ண மலர்களும் வாழும்வரை என் இதயம்
உன்னை ஒருபோதும் மறவாது.

சுந்தரியாய் நின்று என் நெஞ்சைச் சூறையாடிய
சௌந்தர்யமே-சூனியத்தில்
ஏனடி என்னைச் சிறைவைத்தாய்?

காதல் புயலே நீ விளையாட
ஏழை என் இதயமா
உனக்குப் பூவனமானது?

தேன் தும்பிக்கு பூவிடு தூது வாசம் என்றால்
காதல் பூவே உனக்கு -கவிஞன் நான் விடும் தூது
கண்ணீர்க் கவிதையடி
******
கரையை கட்டித் தழுவி முத்தமிட்டும்
காதலடங்காத கடல்போல்-உன்னைத்
தொட்டு தழுவத் துடிக்குதடி என் நெஞ்சு
******
காதலே உன்னை மலர் என்று நினத்தேன்
ஏனடி முள்ளாய் இளநெஞ்சைப் புண்ணாக்கினாய்?
******
கண்வழி நுழைந்து நெஞ்சினில் விழுந்த காதல் தேவதையே
விண்ணூரும் வெண்ணிலவாய் என் காதல் வானில்-நீயடி
மண்ணூரும் கடலைகளாய் நாளும்
நெஞ்சுக்குள் உன் நினைவடி

விழிகள்தான் மொழியில்லாச் சோகத்தை
கண்ணீர் பூக்களாய்ச் சொரியும்
மொழிகள்தான் சொல்லொண்ணாக்
காதல் சோகத்தை கவிதையாய்ப் புனையும்

கண்ணே-விழிகளால் உன் நெஞ்சில்
என் காதலைச் செதுக்கமுயன்றேன்
என் பார்வையை பறித்து
இதயத்தை உடைத்தாய் ஏனடி?
******
என் இதயப் பொன்னூஞ்சலில்
உன்னை இருத்தி ஆட்டிட விரும்பினேன் -நீயோ
கயிற்றூஞ்சலில் ஆடிடப் போனாய் ஏனடி?
******
பொன்வானில் கதிர் எழுதும் கலையும் கோலமல்ல காதல்
இதயங்கள் இணைந்து இதயத்தில் எழுதும் வேதமடி
அழியாக் கோலமடி நம் காதல்
******
காதலை எழுதியழித்திட கண்ணே
என் இதயம் ஒன்றும் கரும்பலகையல்ல
கல்லில் எழுதிய எழுத்தடி-சொல்லில் வடித்த
உயிர்க் கவிதையடி என் காதல

கவிதையால் காதல் சொன்னேன்
அம்பிகாபதி நீயல்ல என்றாள்-அமராவதி
கண்ணீரால் காதல் சொன்னேன்
என் மஜ்னு நீயல்ல என்றாள் லைலா

என் உயிரால் காதல் சொன்னேன்
உருகி கரைந்தே அருகில் வந்ததே
அணையும் உயிரையும் காத்தே
என் தேவதாஸ் நீயே என்றாள் என் பார்வதி.
******
காதல் பூங்காற்றே உன் இதய வானில்
என் காதல் காற்றாடியைப் பறக்கவிட்டேன்
நீ வீசவில்லை,-காதல் பூவனமே, காலைக் கதிராய
நான் வந்தும் கன்னிப்பூவே நீ மலரவில்லை
சோகக் கருவானில் காதல் சந்திரனாய் தேய்ந்தழிந்தேன்
அல்லிப் பூவாய் காதல் சொல்லி மலர்ந்தாய்
மனமெல்லாம் பூவாசம்

என்னைச் சுற்றிவரும் தேன் நிலவே
நீ வரும் பாதையெல்லாம் ஒளி வீச
வெண்முத்துக்களை விண்மீன்களாய் பதித்து வைப்பேன்
நீ நடந்து வரும் பாதையெல்லாம் நலம்பெற
வெண்முகில் விரிப்பாய் வெண்மலர்களை விரித்து வைப்பேன்.

******

என் காதல் உலகே நீயடி
எந்நேரமும்-என்னை கவர்ந்திழுக்கும்
காதல் புவியீர்ப்பு விசையோ
உன் அன்படி
-----
அலைகள் அழித்திட கரையில் எழுதிய
கவிதையாய் ஆனதடி என் காதல்
கார்முகிலாய்க் கரைந்திட-
விண்ணில் எழுதிய என் காதல்
வலிக்குதடி இதயம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# கடவுள்

---

ஆதாமின் தனிமைத் துயர் நீங்க
இறைவன் கொடுத்த காதல் வேதம்-ஏவா
மாது உளம் கனியக் காதல் கொண்டு
மாதுளம் கனியாய் உண்டு காதல் பசியாறி
உள்ளம் மகிழ்ந்து இன்புற்றிரு மானுடா

ஆசையால் கன்னியும் கடவுளைப்போலாகிட
அறிவுக் கனியைத் தேர்ந்தாள்
தானுமுண்டு தன் துணைவனுக்கும் ஈந்தாள்-

காதலால் கரைந்து அர்த்தநாரீஸ்வரனாகி
கடவுளைப்போலாகிட முடியாத துன்பம்
அறிவுக் கனியால் வந்த விபரீதம்

எல்லாம் கனவாய் பொய்யாய் ஆகிட
நிம்மதியும் பறி போயிட
இருமைக்குள் அமிழ்ந்தே துன்புறும்
நன்மை தீமை அறிந்த மானுடம்

உண்மைக் காதலும் வேதம்தான்
அம்மையப்பனாய் அர்தநாரீஸ்வரனாய்
மனிதன் கடவுளாகிட
இறைவன் காட்டிய அன்பின் பாதைதான்
அறிந்தவர் யாரோ? இதைத் தேர்ந்தவர் எவர்?.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# காக்கை

---

குழல் மொழியும், வண்ணப் பூ அழகும் இல்லாத
கரும் பறவை நீ -ஆகாரமாய்
அருவெறுப்பையும் புனிதத்தையும்
ஒன்றாய் ஏற்கும் அபூர்வச் சித்தனும் நீ
ஊதியமின்றி ஊரைச் சுத்தமாக்கும்
ஆகாயத்தோட்டியும் நீ

கூடிவாழ்வதையும், கூடிக் கரைவதையும்
கூடி உண்பதையும் கொண்டாட்டமாக்கிடும்
ஞானப்பறவையினம் உனது.

குயில் முட்டைகளையும்
தன் முட்டை என்றே அடைகாத்து
குஞ்சுகளை வளர்க்கும்-தாய்மையின் பேரழகு
உன் இனத்திற்கே தனித்துவமான ஒன்று.

காக்கைக்கும் தன் குஞ்சு-பொன் குஞ்சே
பழமொழி நிலைக்க -தாய்மை உள்ளத்தோடு
உணவளித்து உயிர்காத்து
குயிலினத்திற்கு உயிர்கொடுக்கும்
தாயே நீ வாழ்க! உன் இனம் வளர்க!

குயில்கள் பாட- உன் இனம் கரைய
குயில் குஞ்சுகளுக்கு-உணவோடு
உன் குரலினிமையும் கொடுத்தாயோ-தாயே?

கரை இது , கரை இது என-வழிதவறிய
கடலோடிகள் கரையறியா கரைந்தே
கரை காட்டும் காந்த ஊசி நீ
அரிய பறவை ராசி நீ

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-09-04-2023*

# கல் நெஞ்சு

---

விழிகளிலோ கண்ணீர் வெள்ளம்
மொழிகளிலோ அழுகையின் நாதம்
முகத்தினிலோ தாடியின் தவக்கோலம்
நெஞ்சினிலோ தேவதாஸின் காதல் சோகம்.

கல்லில் பெய்த மழைபோல ஆனதடி
உன்மேல் நான் கொண்ட காதல்
முள்ளில் விழுந்த பழந்துணியாய்
நோகுதடி காதல் நெஞ்சம்

அன்பினை அறியாத நெஞ்சில்
காதலை விதைத்தேன்-அன்பைப்
புரியாத இதயத்திற்கு-அர்ச்சனையாய்
காவியம் படைத்தேன்.

என் வசந்தமாளிகையை பேரிடி தாக்கியதேனோ?
என் வண்ணப்பூவனத்தில் சோகப்புயல் வீசியதுமேனோ?
கனியென்று நினைத்திருந்தேன் -கன்னியவள் பொன்மனதை
கல்லாய்க் கண்டபின் மொழியிழந்தே ஊமையானேன்

விண்பூத்த நிலவும், மண்பூத்த மலர்களும்
கண்டு இரசிக்காத நெஞ்சம், காதலிலும்
அந்தஸ்தே உயர்ந்ததென்ற முதலாளித்துவம்-
ஏழைக்கு ஏனோ காதல் என
என்னை நிராகரித்த தத்துவம்

வைத்தியரோ, பொறியியலாளரோ
நான் வேண்டும் வரன்-ஏழையின்
காதல் நான் வேண்டாத வரம்
கன்னியின் கூற்று காதல்
நெஞ்சில் பாய்ந்த அக்கினிச் சரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-7-4-2023*

# காலைப் பொழுது

மேகக் கலிங்கம் சூடியும் களைந்தும்
விளையாடிய வெண்ணிலா தூங்கிட
இன்ப இரவும் மயங்கியே சென்றிட
“கொக்கரக்கோ” என்று கூவிய சேவல்

ஆந்தை ஒன்று எழுந்து பறந்திட
ஆ நிரையொன்று மெல்ல நடை பயின்றிட
பழ மரங்களில் விருந்தாடிய வெளவால் கூட்டம்
ஆனந்தமாய்ச் சிறகடித்து எழுந்து பறந்தது

கிழக்கு வானம் நாணிச் சிவந்திட
கண்விழித்த பூவினங்கள், காலைப்பனியில் நீராடி
வண்ண ஆடையுடுத்தி வாசச் சந்தனம் பூசி மலர்ந்திட
புள்ளினங்களின் பூபாளம் இசைத்து கதிரவனைக் கொண்டாடிட
பூக்கோலமும் புள்ளினங்களின் இசைகோலமும்
கண்டு மகிழ்ந்த இறைவன்

உதயத்தின் உன்னத ஆலாபனத்தை அசிங்கபடுத்திட
நாற்பறமிருந்தும் காதைப் பிளக்கும் வாங்கொலிகள்
நாமாவாளிகள், பிரித் ஓசைகள், ஜெபமாலைச் சத்தங்கள்

இசையை இழிவுபடுத்தும் சத்தங்கள்- மதவாத்தின்
யுத்தப் பேரிகைகளாய் ஒலித்திட-நாமம் தரித்து,
குல்லா அணிந்து, நீறு பூசி-சிலுவை தரித்த
மதவாதக் கூட்டங்கள் எதிரெதிராய்ச் செல்கின்றன
நாம ரூமற்ற எங்கும் நிறைந்த ஒரே இறைவனை
மதங்களால் பிரித்து மதவாத்தால் நியாயாப்படுத்தி
தொழுது மகிழ்ந்திட

புள்ளினமும் பூவினமும் தொழுதிடும் இறைவனைக்
கண்டவர்கள் காலணிகளை கழற்றிப் பணிந்திட
முட்செடியில்  “முத்திப்பழங்களை” தேடும் மூடர்
கற்சிலைகளைக் கடவுளாய் எண்ணி-வெற்றுச்
சடங்குகள் செய்து மூடபக்தியில் நிலைக்கின்றார்
பக்தி வர புத்தி போகும் உரைக்கின்றார்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-05-04-2023*

# கல்லுக்குள் தெய்வம்

---

கல்லும் சிலையானது சிற்பியன் கைவண்ணத்தில்
தொழுது வணங்கிடச், சிலையும் தெய்வமானது மானுட இதயத்தில்
கல்லையும் கனிந்து தொழுதவர் அமைதி கண்டார்?
காவியையும் துறவாய் ஏற்ற கபடதாரிகளோ
இனவாதம் உமிழ்ந்து தேசபக்தராய் நடமாடுகின்றார்

ஊர்கள்தோறும், வானுயர்ந்த புத்தர் சிலைகளும்
வண்ண விகாரைகளும் ஒளியில் மின்னிட
அரசியல் மேடைகளில் இனவாதம் ஓங்கி ஒலித்திட
காவிகள் வெளிறிட தேசமெங்கும் இனவாத தீ

புத்தர் சிலைகளோ போதி மரத்தடியில்
புத்தம், தம்மம் பொலிவிழக்க
சங்கம் அரியிணையில் -
அரசியல் வாதிகளோ காலடியில்

நீதியும், சமத்துவமும்
சிறுபான்மையினருக்கு கனவானது
எல்லோரும் இந்நாட்டு மன்னர்
பாரதியின் கவிதையானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# கனவு

---

வண்ணக் கனவினைச் சுமந்து
வசந்தமாளிகையாய் மாறிய நெஞ்சம்
காதல் தேவதைக்கு கோயிலானது

எண்ணக் கருவினில் ஆயிரம் கற்பனைகள் பிறந்திட
எழுத்திலும் பேச்சிலும் கம்பனும் கண்ணதாசனும் கவிதை பாடிட
கவி அரங்காய் மாறிய காதல் நெஞ்சம்
இறகு முளைத்திட காதல் வானில் எழுந்து பறந்தது

காதல், காதல், காதல்
காதல் இன்றேல் சாதல், சாதல் என்றே
பாரதியைப் போற்றியது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-04-2023

# கனவும் கற்பனையும்

---

நிழலாய் நீங்காமல் என்னைத் தொடரும் அன்புறவே,
உயிர்க் காற்றாய் உயிரோடும் மெய்யோடும் கலந்து
இரவிலும் தொடரும் இன்பக் கனவே,
தொழுது மகிழ்ந்த இன்பத் தாயுறவு வானம் போனபின்பு
விழுதாய் என்னைத் தாங்கி, ஈர விழிகள் துடைத்து
அன்னை மடி ஈந்து ஆறுதல் தருபவள் நீயடி

அன்பெனும் உலகை எனக்காய்ச் சிருஷ்டித்து
ஆனந்தக் காதலால் என்னை இன்புறவைக்கும் தேனமுதே,
என் உள்ளோடும் குருதியிலும்
உயிர் வாங்கும் சுவாசத்திலும் நீயடி

தாயன்போடு என்னைத் தாலாட்டும்-காதலே
தாயக்குப் பின் தாராமாய்
இறைவன் எனக்கீந்த இன்பகொடை-நீயடி

**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-4-2023

# கண்டதும் காதல்

---

இதயம் கலாபமயிலாய்த் தோகை விரித்தாட
குரல் கேட்டதும் உள்ளம் சிலிர்த்தே
நெஞ்சம் சோடிக் குயிலாய் கவிதை பாட
கண்டதும் காதல் கொண்டேனடி-கண்ணம்மா

உன் நெற்றிச் சுருளும் நீள் விழிகளும்-நெஞ்சில்
காதல் தீயை மூட்டிட-வட்டமுகத்தில் மொட்டவிழும்
காதல் புன்னகையோ காமன் கணையாய்
இளநெஞ்சை வருத்துதடி

உன் கொவ்வை இதழ் “கள்ளை”- வஞ்சிமகளே
கொஞ்சிப் பருகிட நெஞ்சு துடிக்குதடி
என் சுவாசத்தை மயக்கும் உன் பூமேனி வாசத்தை
முல்லை மலரே அள்ளிப் பூசிட ஆவி துடிக்குதடி

எட்டும் தூரத்தில் நீயிருந்தும்-ஏழ்கடல் ஆழத்தில்
ஏனடி பூ நெஞ்சைப் பூட்டி வைத்தாய்
வெட்டுப்பாறையில் வைத்த சிரசாய் என் இதயம்
காதல் சோகத்தில் வாடுதடி

கொட்டும் மழையென விழிகள் சிந்தும் சோகம்
விரகதாபத்தை கூட்ட-கட்டியணைத்து
முத்தமழையில் நீராடி காமன் காவியம் படித்திட
காதல் நெஞ்சம் தவிக்குதடி

கொட்டும் பனியென-உன் சீதளப் பார்வை
காதல் சுரத்தை கூட்டுதடி, முல்லை மொட்டென விரியும்
உன் மோகனச் சிரிப்பில் என் சிந்தையும் சிறகு முளைத்தே
காதல் வானில் எழுந்து பறக்குதடி.

என் கட்டழகே-கவிதைப் பெட்டகமே-நெஞ்சில்
நித்தம் உலாவரும் காதல் தேன்நிலவே
உன்னைக் காணும்போதெல்லாம் நெஞ்சிலே பூமழை
காணாத பொழுதெல்லாம் இளநெஞ்சுக்கோ அமாவாசை

உன் ஒரு புன்னகையால் மலரும் காதல் பூ நான்
உன் காதல் தேனால் உயிர்வாழும் தேன் தும்பி நான்
என்னவளே என்னை ஒரு போதும் மறவாதே

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-4-2023*

# கண்கள்

---



கண்களா இவை
காதல்மொழி பேசும் கயல்கள்
கண்களா இவை
காதல் "கள்" சுரக்கும் தேன் மலர்கள்





விழிகளா இவை என்னை வீழ்த்திடும்
காமன் கணைகள்
விழிகளா இவை கல்நெஞ்சிலும்
காதல் செதுக்கும் வேல்கள்

கண்களா இவை பார்வையாலே
என்னை தொட்டுத் தழுவிடும் படடுப் பூக்கள்

பட்டாம் பூச்சி இமைகள் முடி திறப்பதால் வீசுவதோ
காதல் தென்றல்-இவள் ஒரு பார்வையால்
என் நெஞ்சை பற்றிக்கொண்டதோ காதல் சுரம்

விழிகளா இவை வெண்வானில் உலா வரும்
கரு நிலாக்கள்

கண்களா இவை -காதல் தேன் சொரியும் குவளைப் பூக்கள்
கண்களா இவை -காதல் சுரங்கத்தின் பூங்கதவுகள்

என்னை நீ பார்த்தபோது-என் கண்களுக்குள் நீயும்
உன் கண்களுக்கள் நானும் இடம்மாறிப்போன
அதிசயம்தான் காதலால் கண்கள் செய்யும் மாயமோ?

பார்த்தேன் இரசித்தேன்
பார்வையால் கட்டுண்டு கிடக்க
இவள் விழிகள் காதல் வலை பின்னும்
மாயச் சிலந்திகளோ?

கன்னியர் கயல்விழிகள் போடும் காதல் தூண்டிலில்
சிக்குண்ட சிறுமீன்களாய் ஆண் மனங்கள்..

நிலவிலும் இல்லாத நீர்க்குளத்தில்
நீந்திடும் இரு கயல்களாய்
உன் நிலா முகத்தில் இரு விழிகள்.

மூடிய இவள் விழிகள் மெல்லத் திறந்தபோது
முத்துச்சிப்பி கண்விழித்த அழகுக்கோலம்

காதல் சொல்ல மொழிகள் எதற்கு
கயல் விழிகள் பேசும்போது.

மான் விழியாள் காதல் வலையில்
சிக்குண்ட புள்ளிமான்களாய் ஆண்கள்

மையெழுதிய இவள் விழிகளில்
என் மனம் தேன் தும்பிபோல் மொய்த்துக்கிடக்க
கள்வடியும் பூக்களா இவள் விழிகள்-இல்லை
காதல் தேன் சுரக்கும் மலர்கள்.

காதல் மகரந்தத்தை-காளையர் நெஞ்சில் தூவும்
வண்ண மலர்களோ இவள் வாடா விழிகள்.

வில்லைக்குள் தெரிந்தது விழிகளல்ல, வேல்கள்
வீழ்ந்தலை மான்களைல்ல, ஆண் மனங்கள்

யார் வைத்தார் இவள் விழிகளுக்குள்
ஆண்மனதை கவர்ந்திழுக்கும்
அதிசயக் காதல் புலத்தை

விலகிப்போக நினைத்தாலும், விட்டுப் பிரிய
முனைந்தாலும், ஓடி ஒளிய முனைந்தாலும்,
விட்டுப் பிரியாத ஈர்ப்பு விசையாய்
என் னை ஈர்க்கும் காதல் ஈர்ப்புவிசை
இவள் விழிகள்தானோ?

வேல்விழியாள் காதல் நோய் தந்து
பூவிழியாள் என் னைத்தேற்றும்
காமினியாள் இவள்தானோ?

விழிகள் சந்தித்தபோது மொழிகள் இன்றி
நெஞ்சில் காதல் நெருப்பை மூட்டும்-இவள் விழிகள்
காதல் சக்கி முக்கி கற்களா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-6-4-2023*

# கண்ணம்மா என் காதலி

---

ஏனடி என் அன்பே என்னை வாழ்த்த மறந்தாய்?
உன் ஒரு வாழ்த்துக்காய் என் நெஞ்சம்
குழந்தைபோல் அழுது
ஒற்றை குயிலாய் கேவிக் கரைந்ததடி.

எல்லோரும் வாழ்த்தி மகிழ-என் உள்ளமோ-
உன் ஒருத்தியின் வாழத்துக்காய் ஏங்கித் தவிக்க
என் அன்பே ஏனடி என்னை மறந்தாய்?

என்னை மறந்திட -என் அன்பு
காற்றில் கலையும் மேகமா?-இல்லை
நீரில் போட்ட அழியும் கோலமா?-
சொல்லடி என் செல்லப் பைங்கிளி

அலையும் கடலபோல் நெஞ்சு தவிக்க
அன்பு மழையின்றி வாடும்
சின்னப் பயிராய் உள்ளம் சலிக்க
என் அன்பே ஏனடி என்னை மறந்தாய்?

அன்பே என் நெஞ்சுக்குள் நீயும்
உன் நெஞ்சுக்குள் நானும்
இடம் மாறிப் பிறந்த நாள்தான்
நம் காதல் பிறந்த நாள்

நம் இருவரின் பிறந்த நாள்- அதுவே
அதனால் உங்களை நான் வாழ்த்தவில்லை
நீ சொன்னபோது ஆனந்த கும்மி பாடி-உன்னை
அள்ளியணைக்கத் துடித்த எந்தன் காதல் மனசு

இருந்தும்-மறுநாள்
வாழ்த்த மறந்த நாளுக்காய் வருந்தி
உன் பிஞ்சு விரல்களால் என் கைத்தலம்பற்றி
வாழ்த்துச் சொன்ன போது
என் நெஞ்சுக்குள் கோடிப் பரவசம்

சுகிர்த்த இன்பத்தை சொல்ல வார்த்தையின்றி மனசு
தவிக்க, தேன் மலர் துய்க்கும் வான் தும்பியாய்
என் இதயம் இறக்கை முளைத்து எழுந்து பறக்க
எத்தனை இன்பம் தந்தாய் என்னவளே

உன் பொன்மேனி தீண்டும்போது
பூந்தென்றல் தழுவும் பரவசம்
உன் பூமுகம் உதிர்க்கும் புன்னகையோ
நெஞ்சுக்குப் போதைதரும் மதுரசம்

உன் ஒரு புன்னகையால் நெஞ்சுக்குள் பூமழை பொழிய
உன் சுட்டும் விழிச்சுடரால் என் நெஞ்சுக்குள்
காதல் தீபம் எரிய-என் தவிப்பும் போனதடி
கண்ணம்மா-என் தனிமையிருளும் கலைந்ததடி

காதலின் இனிமையைக் கல்நெஞ்சு சுவைக்க
பேரின்பம் தந்த- தேவதையே -பனியாய் உருகி
நதியாய் ஓடி உன்னில் கலந்திட துடிக்குதடி
காதல் கடலே-எந்தன் மனசு

உன்னைக் காணும்போதெல்லாம் -பூவாய்
மலரும் எந்தன் காதல் மனது-என்
கண்களை விட்டு-நீ நீங்கும்போதெல்லாம்
அந்தகனாய் உன்னை தேடித் தவிக்கும் இளவயசு

என் பெயர் சொல்லி நீ அழைக்கும்போதெல்லாம்
கண்ணம்மா என் நெஞ்சுக்குள் தாயின் தாலாட்டு
உன் பூவிழி சிரிப்பு-என்னைத் தொட்டுத் தழுவும்
போதெல்லாம் காதல் மழையின் புது நீராட்டு

உன் கனியிதழ் சுவையை
தேன் கனியால் சுவைக்க தந்தவளே
உன் விழிப்பூக்களின் தேனை
ஒரு பார்வையால் பருகசெய்பவளே
கண்ணம்மா என்றும் என் காதல் நீயடி
உன் காதல் நானடி.

உன் காதலால் சிவமாகின்றேன்
என் காதலை நீ துறந்தால் சவமாவேன்
என் அன்பே என்னை மறவாதே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-6-4-2023*

# காதல் காவியம்

என் இதயமே உன் தாஜ்மஹால்
அன்பே நீதான் என்தன் மும்தாஜ் என்றேன்
என் “ஷாஜகான்” நீயல்ல என்றாய்

ஆயிரம் கவிதைகள் உனக்காய் பாடி வைத்தேன்
என் அமராவதி நீதான் என்றேன்
என் “அம்பிகாபதி” நீயல்ல என்றாய்

அழியாத ஓவியமாய் என் நெஞ்சில்
உன்னைத் தீட்டி மகிழ்ந்தேன்
உன் “மோனலிசா” நானல்ல என்றாய்

கொடு வெயிலும், சுடுமணலும் தகிக்க
அழகே நீதான் என் “லைலா எனக் கதறினேன்
என்தன் “மஜ்னு” நீ அல்ல என்றாய்.

“அனார்க்கலி” நீதான் என் உயிர் என்றேன்
இறந்தாலும் உன்னை மறவேன் என்றேன்
நீயல்ல என் “சலீம்” என்றாய்

நெஞ்சம் சுக்கு நூறாய் நொருங்க
நஞ்சே இனி எனக்குத் தஞ்சம்
அன்பே “பார்வதி” என்றேன்

நெகிழ்ந்தாள் நிலை குலைந்தாள்
நெருங்கி வந்து நெற்றியில் முத்தமிட்டே
நேசம் பொங்கிட மார்போடணைத்து, கண்ணீர்
துடைத்து, என் காதல் நீதான் என்றாள்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-7-4-2023*

# காதல் கிளி

---

உன் கண்ணீர் முத்துக்களால் காயமான என் நெஞ்சுக்கு
உன் புன்னகைப் பூக்களால் மருந்திட்டாய்
காமன் கணைகளால் புண்ணான இதயத்திற்கு
மாமன் மகளாய் மாலையிட்டாய்

காதலாகி கனிந்தே உன் பொன்மடி வீழ்ந்தபோது
நாணச் சிவப்போடு எனை அள்ளியணைத்தே
உன்னைத் தந்து என்னை மகிழ்வித்தாய்

நெற்றிச் சுருளும் நீள் விழிகளும், என்னைக் காதல் பித்தனாக்க
முத்துப் பல்லும் மோகனச் சிரிப்பும் பூ நெஞ்சில் காதல் தேனைச் சிந்த
சித்தம் நினைப்பு செய்கையெல்லாம் கத்தும் கடழேலாய்
காதலால் பொங்கியெழ
காதல் புவியீர்ப்பே உன் முத்த மழையில் நனைந்து
மோகன மடியில் விழுந்தேன்

காதல் கிளியே
என்னை கடித்து சுவையடி
என் காதல்  பசி தீரடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-4-2023

# காதல் மலர்

நெஞ்சுக்குள் குறிஞ்சிப்பூவாய் மலர்ந்தவளை
நினைவெல்லாம் இன்பத்தேனாய் இனிப்பவளை
உயிர்ச்சுவாசத்தில் முல்லைப்பூவாய் மணப்பவளை
உயிரில் கலந்த அன்புறவைச் சொல்லால்
சுட்ட துன்பம், நெருஞ்சி முள்ளாய் நெஞ்சை வருத்த
நித்திரையும் போனது தீர்த்தயாத்திரை
என் விழிகளிலோ கண்ணீர்த் திரை

சொல்லடிபட்டு கலைந்ததடி என் காதல் தேன் கூடு
முள்முடி சூடி சோகச் சிலுவை சுமக்குதடி
உன்தன் காதல் உயிர்க் கூடு

வஞ்சிமகள் புன்னகையால் நெஞ்சமெல்லாம்
பூபாளம் நினைவெல்லாம் மோகனம்
பிள்ளைத் தமிழில் வண்ணமகளும் நேசம் சொல்ல
நெகிழ்ந்த நெஞ்சு கண்ணீர்ப் பூக்களைக்
காணிக்கையாக்க கலங்கியழுத பேதை
என்னை காதலால் சூடிய பூங்கோதை

வட்டமுகமும் வண்ண விழிகளும்
காதல் மழை பொழிந்திருக்க-
புன்னகையை என் நகையாக்கிய என் பிரியாள்
என்றும் உங்களைப் பிரியேன் என்றாள்

நெஞ்சம் அவள் நினைவால் மகிழ்ந்திருக்க
கொஞ்சும் கிளிகளாய் உறவு மலர்ந்திருக்க
செவ்வாய் அமுதைச் சுவைக்க நோன்பிருக்கும்
காதல் நெஞ்சம், காதலே நீதான் என் தஞ்சம்
கவிதை சொல்லி களித்திருக்கும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-7-4-2023*

# காதல் மனங்கொத்தி

அதிசயக் காந்தப் புலத்தால்
காமன் செய்த காதல் தேவதையே, நாளும்
பொழுதும் என் நெஞ்சை கவ்வியிழுக்கும்
காதல் காந்தம் நீயடி

அதிசயக் காதல் புலத்தை யார் வைத்தார்
உன் கயல்விழிகளில்.
எங்கு சென்றாலும் என் இரும்பு இதயத்தை
ஈர்த்து வாட்டுதடி உன் கடைகண் பார்வைகள்.

ஒருவிழியால் எனை மயக்கி,  மறுவிழியால்
என் நெஞ்சை கொத்தும்-அதிசயக்
காதல் மனங்கொத்தி நீதானா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-4-2023

# காதல் முல்லை

---

காய்ந்து கருகி நீரின்றி வாடும் பயிராய் நெஞ்சம்
காதல் மழையின்றி வாடிக் கிடக்க,-உருகிக் கரைந்து-
வெண்பனியாய் உள்ளம் நெகிழ்ந்தோடித் தவிக்க,
விழிகள் பனித்து-பார்வை சூனியத்தில் நிலைக்க,
மொழியும் குழம்பி அழுகையாய் ஒலிக்க-உயிரே
உனைத்தேடி என் இதயம் தேய்பிறையாய் மெலியுதடி.
வெண்முகிலாய் அலையுதடி

காதல் தவமிருந்தே உன் தேவதாஸ்
கண்ணீரில் உருவழிய-ஏனடி
பார்வதி என்னை மறந்தய்?

கயிறறுந்த பட்டமாய் காதல் புயலில் இளநெஞ்சம்
அல்லாடித் தவிக்க, உயிரோ ஒற்றைக் குயிலாய்
உனைத் தேடி கூவி களைக்க, என் புள்ளிக் குயிலே
இன்னும் ஏனிந்த மௌனம்?

காதல் தவமிருக்கும் என் இதயம்-நாளும்
உன் இதயவாசலில் கண்ணீர் கோலங்கள் போடும்
சோகப் புயலில் அல்லாடித் தவிக்கும் காதல் முல்லை
கொழுகொம்பாய் நாளும் -உன் இதயத்தை யாசிக்கும்.

காதல் முல்லை படர பார்வதி-நீயும்
புதிய வள்ளல் பாரியாய் மாறி-ஈவாயோ
வண்ணத்தேராய் உன் இதயத்தை
சொல்லடி பார்வதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# காதல் நோய்

நீளும் இரவும்- கருவான் நிலவும் நெஞ்சை வாட்டிட,
விரக தாபத்தைக் கூட்டிட, ஊனும் உயிரும் ஒன்றாய்
உருகிட, உணவும் பானமும் வேம்பாய்க் கசந்திட
வாழ்வே வெறுமையான அவலம்

உன்னைப் பிரிந்த கணமெல்லாம்
அன்பே-எனையிழந்தே
வானைப் பிரிந்த நிலவாய்த் தேய்கிறேன்
வாசமிழந்த மலராய் வாடி உதிர்கிறேன்

என் விழிகளிலோ  கண்ணீர் கோலம்
என் மொழிகளிலோ முகாரியின் ஆலோலம்

பூக்களின் வண்ணமும் வாசமும், பூவையே
உன்னை நினைவுட்ட-பூந்தென்றலின் தழுவலும்
தேவதையே விரகதாபத்தை கூட்டிட
சீதையை பிரிந்த ஸ்ரீராமனாய்  என் மனது
சிறையிருக்கும் சீதையாய் துக்கித்திருக்கும்
உன் காதல் மனசு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-5-04-2023*